[25th January 1961]

வரலாறுகள் இருக்கவில்லை. ஆகவே, அம்மாதிரி வரலாறுகளைச் சேர்த்து சரித்திரப் புத்தகங்களை வெளியிட சர்க்கார் முன்வருவார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : தனிப்பட்டோர் ஆராய்ச்சி செய்து அம்மாதிரி எழுதலாம். அதில் சர்க்கார் நடவடிக்கை எடுக்கவேண்டிய அவசியம் இல்லை. சர்வ கலாசாலைகளும் நடவடிக்கை எடுக்கலாம்.

SRI K. SATTANATHA KARAYALAR : May I know whether this Government was contacted by the Central Government in compiling the National Register of Historical Documents and Monuments?

THE HON. SRI C. SUBRAMANIAM : I am sorry I do not have that information with me just now.

SRI S. NAGARAJA MONIGAR : ஸார், அப்படி திருத்திச் சரித்திரம் எழுதப்பட்டால், சுதந்திரத்திற்கு சம்மதமாகவும் எழுதி, சுதந்திரத்திற்கு சாதகமாக யார் யார் இருந்தவர்கள், பாதகமாக இருந்தவர்கள் யார் யார் என்று மக்கள் புரிந்துக்கொள்ள சரித்திரம் நிலைநாட்டப் படுமா ? (சிரிப்பு.)

THE HON. SRI C. SUBRAMANIAM : எழுதுவதாகச் சொல்லவில்லை.

*Co-operative Milk Supply Union (Salem)*

* 197 Q.—SRI A. VEDARATHNAM : கனம் ரெவின்யு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

சேலம் கூட்டுறவுப் பால் விநியோகச் சங்கம் பாலில் கலப்படம் செய்ததாக வந்த புகாரின் பேரில் அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்துக் கொண்டிருக்கிறது ?

THE HON. SRI M. A. MANICKAVELU : A case was filed in the Court of the Additional Magistrate No. 2, Salem. The Magistrate imposed a fine of Rs. 1,000 on the Society. The President was let off with admonition and the Secretary and the vendor were acquitted.

SRI A. VEDARATHNAM : இன்னும் பல சங்கங்களிலே இம்மாதிரிப் பாலில் தண்ணீர் கலந்து வியாபாரம் செய்கிறார்கள்; ரெயில்வே ஸ்டேஷன்களில் இருக்கும் பாலெல்லாம் தண்ணீராக இருக்கிறது. அவற்றைக் கண்டுபிடித்து, தக்க நடவடிக்கை எடுக்க சர்க்கார் முன்வருமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : கூடுமானவரையில், இவைகளைச் செக் பண்ணி, ப்ரிசீலனை செய்து, எங்கெங்கே தண்ணீர் கலந்து அகப்படுகிறார்களோ, அங்கங்கே ப்ராஸிக்யூஷன் செய்கிறோம்.